# முகவுரை



அமிழ்தினும் இனிய தமிழ்மொழியின் கண் ஏற்பட்டுள்ள நீதி நூல்களோ பல. இவற்றுள், நாலடியார், திருக்குறள் என்பவை யாவராலும் அரிதில் போற்றப்படும். இவ்விரு நூல்களும் தமிழ் பயில் வோர்க்கு இன்றியமையாதன என்பது, "ஆலும்வேலும் பல்லுக்குறுதி, நாலு மிரண்டுஞ் சொல்லுக்குறுதி," எனும் பழமொழியில் ஏற்படும்.

இவை கடைச்சங்கத்தார் காலத்தனவாய், சங்கம் மருவிய நூலென வழங்கும். நாலடியாரை இயற்றியவர் சமணமுனிவர் பலர் என்பர்; ஒவ்வொருவரும் ஒரு செய்யுள் இயற்றினர் என்று கூறப்படும்.

முன்னொருகாலத்தில், சமணமுனிவர்கள் எண்ணாயிரவர், கொடிய பஞ்சத்தால் வருந்தி மதுரையை அடைதலும், அங்கிருந்த அரசன் உக்கிரப்பெருவழுதி என்போன், அவர்களை ஆதரித்துவந்தான். இங்ஙனம் சிலநாள் ஆக, பின்பு பஞ்சம் நீங்கி நாடு நாடாயினமை யறிந்து, அம்முனிவர்கள் தம்தம் உறைவிடம் ஏகப் பாண்டியனை விடைவேண்டினர். கல்வி கேள்விகளிற் சிறந்து விளங்கிய பாண்டியன், அவ்வரும் புலவர்களைப் புறந்தர இசையாது தாழ்த்தனன். தாழ்த்தலும், முனிவர்கள் அனைவரும் சங்கேதமாய் ஓரிரவில் எவரும் அறியாதபடி அந்நாட்டை விட்டு அகன்றனர். அங்ஙனம அகலுகையில் அன்னோர் ஒவ்வொருவரும் தனித்தனி ஒவ்வொரு வெண்பா பாடித் தங்கள் தங்கள் பீடத்தின் கீழிட்டுச் சென்றனர்.

மறுநாள் பொழுது புலர்ந்ததும், பாண்டியன் புலவரைக் காணாது ஏங்கி, அவர்கள் இருந்த இடங்களைச் சோதிக்கையில், ஒவ்வொரு பீடத்தின் கீழும், ஒவ்வொரு பாடற் சீட்டு இருக்கக் கண்டான். அரசன், அவைகளை ஒன்றுசேர்த்து நோக்குகையில், அச்செய்யுட்கள் தாம் பலவாய் ஒன்றற்கொன்று பொருட்பொருத்தம் இல்லாது, பலநீதிகள் கொண்டனவாய் இருந்தமையின், அவன் அச்சீட்டுக்களை யெல்லாம் வைகை யாற்றில் எறிந்துவிடப் பணித்தான். அவன் சொற்படி வெள்ளத்தில் எறியப்பட்ட எண்ணாயிரம் செய்யுட்களில், நானூறு பாடல்கள் ஆற்றில் நாலடி உயரம் எழும்பி எதிரேறி நாற்கால் மண்டபம் நண்ணினவாம். அதுகண்டு பாண்டியன் வியந்து, அவற்றையெல்லாம் எடுத்து ஒருநூலாக்கி, நாலடியார் எனப் பெயரிட்டு ஆதரித்து வந்தான் என ஒரு கதை வழங்கிவருகின்றது. இவ்வரலாறு கீழுள்ள செய்யுளால் ஏற்படும்.

> "மன்னன் வழுதியர் கோன்வையைப் பேராற்றின்
> எண்ணி யிருநான்கோ ராயிரவர்—நண்ணி
> எழுதியிடும் ஏட்டுக்குள் எடெதிரே ஏறும்
> பழுதிலா நாலடியைப் பார்."

இதன் உண்மை யாதாயினும் ஆகுக. நான்கு அடிகள்கொண்ட சிறந்த நீதிநூல் எனும் கருத்துவிளங்க, "நாலடியார்" எனப் பெயரிடப்பட்டு, இஃது காரண இடுகுறிப்பெயர் வாய்ந்து, வழங்கிவருகின்றது என உரைத்தல் சாலச் சிறப்புடையதாம். ஈரடிகளையுடைய குறள் வெண்பாக்கள் திருக்குறளை உணர்த்துவதுபோல், நான்கு அடிகள்கொண்ட வெண்பாக்கள் நாலடியாரை உணர்த்திற்று எனல், மிகப் பொருத்தமுடையதாம்.

அன்றியும் பிற்காலத்தில் பதுமனார் எனும் சமணசமயப் புலவர் ஒருவர், இந்நூற்குப் பால், இயல், அதிகாரம் முதலிய பாகுபாடுகள் செய்து இதனை ஒருவாறு ஒழுங்குபடுத்தினர் என்பர். மநுஸ்மிருதி முதலிய நூல்களில் அடங்கிய அரிய நீதிகளையும் இந்நூலில் காணலாம். இதன் பெருமை கீழுள்ள செய்யுளாலும் ஏற்படும்.

"எண்ணு யிரவர் இசைத்தவெண்பா நானூறும்
கண்ணுமிந் நாலடியைக் கற்றுணரத்—தண்ணார்
திருக்குருகூர் மாறனையே தேர்ந்துமறை தேர்ந்த
திருக்குருகூர் மாறனையே தேர்."

நச்சினார்க்கினியர், பரிமேலழகர், அடியார்க்கு நல்லார் முதலிய உரையாசிரியர்கள், இந்நூலை நன்கு போற்றி ஆதரித்தார்களெனவும் ஏற்படும். ஆகவே, நாலடியார், ஒரு சிறந்த நீதிநூல் என்பது பல்லோர் துணிபு.

நாற்பது அதிகாரங்கள் அடங்கிய நாலடியாரினின்று, நாற்பது செய்யுட்கள் எடுத்துத் தொகுக்கப்பட்ட இஃது நாலடி நாற்பது எனும் பெயர் கொண்டது. ஒவ்வொரு அதிகாரத்திலிருந்தும், ஒவ்வொரு செய்யுளாக எடுத்து அந்த அந்த அதிகாரத்தின் பெயரையே இவைகட்கும் தலைப்புப் பெயராக இடப்பட்டது.

அன்றியும், கல்விச்சாலை மாணவர்கள் கற்பதற்கு இயலாத அதிகாரங்களை விலக்கி, "பன்னெறி" எனும் அதிகாரத்தினின்று சில செய்யுட்களை எடுத்துப் பொருத்தமான தலைப்புப்பெயரும் தந்து தொகுத்துள்ளேன். அனைவரும் எளிதில் கற்றுணருமாறு, செய்யுட்களை, சீர், தளை பிறழாதபடிக்குச் சந்திகளை ஆங்காங்கு உரிய முறையில் பிரித்து, தெளிவான பதவுரையும் குறிப்புரையும் வரைந்து இதனுடன் சேர்த்திருக்கின்றேன்.

இச்சிறிய நூல் பலர்க்கும் பயன்படும்படி, இதனைப் பதிப்பித்து வெளியிட இசைந்த மாக்மில்லன் கம்பெனியாரின் உதவி என்றும் மறக்கற்பாலதன்று.

இங்ஙனம்,

பு. கடாம்பி கிருஷ்ணமாசாரியன்.

# அறத்துப்பால்

## 1. செல்வம் நிலையாமை

செல்வர்யாம் என்றுதாம் செல்வுழி எண்ணாத
புல்லறி வாளர் பெருஞ்செல்வம்—எல்லில்
கருங்கொண்மூ வாய்திறந்த மின்னுப்போல் தோன்றி
மருங்கறக் கெட்டு விடும். (1)

(பதவுரை) செல்வர் யாம் என்று-நாம் செல்வமுடையோம் என்று கர்வம் கொண்டு, தாம் செல்வுழி-தாம் செல்லும் இடங்களில், எண்ணாத-(எவரையும்) அவமதியாத, புல் அறிவாளர்-அற்ப அறிவுள்ளவர் (மூடர்) பெற்ற, பெரும் செல்வம்-மிகுதியான செல்வம், எல்லில்-இரவில், கருங்கோண்மூ-கரியமேகம், வாய்திறந்த-வெளிப்படுத்திய. மின்னுபோல்-மின்னல்போல, தோன்றி-வெளிப்பட்டு (சிறிதுபோதே இருந்து), (பின்பு), மருங்கு அற-இருந்த இடமே தெரியாமல், கெட்டுவிடும்-அழிந்துவிடும்.

குறிப்பு:—கரிய மேகத்தினிடையில் மின்னல் எவ்வண்ணம் திடீரென்று தோன்றி உடனே மறைகின்றதோ அவ்வாறே புல்லறிவாளர் பெற்ற செல்வமும் தோன்றிக் கெடும்.

செல்+உழி=செல்லுழி என்று ஆக வேண்டும்; அங்ஙனமின்றி இடையில் 'வ்' எனும் மெய்யெழுத்தைப் பெற்றது; இதனை 'மெய்யீற்றுடம்படு மெய்' என்பர் நச்சினார்க்கினியர். புன்மை+அறிவாளர்=புல்லறிவாளர்; பெருமை+செல்வம்=பெருஞ்செல்வம்; கருமை+கொண்மூ=கருங்கொண்மூ; (பண்புப் புணர்ச்சி). கொண்மூ-மேகம் (மழை நீரை முகந்துகொள்வது); காரணப்பெயர்.

ஓர் உபமானத்தைக்கொண்டு ஒரு நீதி விளக்கப்பட்டது. இஃது உவமையணி ஆகும். 'எல்' என்பதற்குப் பகல் என்று பொருள்கூறி அணியைச் சிறப்பித்தலும் கூடும்.

அரிய மொழிகள்:—எல்-இரவு; கொண்மூ-மேகம்; மருங்கு-பக்கம்; இடம்; அற-கெட. (1)

## 2. இளமை நிலையாமை

மற்றறிவாம் நல்வினை யாமிளையம் என்னாது
கைத்துண்டாம் போழ்தே கரவா தறஞ்செய்ம்மின்
முற்றி யிருந்த கனியொழியத் தீவளியால்
நற்காய் உதிர்தலும் உண்டு. (2)

(ப-ரை) யாம் இளையம்-நாம்சிறுபிராயத்தவராய் இருக்கின்றோம் (ஆதலால்), நல்வினை-தரும காரியங்களை, மற்று அறிவாம்-பிந்திய பிராயத்தில் யோசிப்போம், என்னாது-என்று கூறாமல், கைத்து உண்டாம் போழ்தே-கையில் பொருள் உள்ளபோதே, கரவாது-(இல்லையென்று அப்பொருளை) மறைக்காமல், அறம் செய்ம்மின்-தருமகாரியங்களைச் செய்யுங்கள்; (ஏனெனில்): தீவளியால்-கடுமையான காற்றினால், முற்றி இருந்த கனி ஒழிய-முற்றிய பழங்கள் இன்றி, நல்காய்-நல்ல காய்கள், உதிர்தலும் உண்டு-(அடிபட்டுக் கீழே) விழுதலும் உண்டு.

குறிப்பு:—கையில் பொருள் உள்ளபோதே தருமகாரியங்களைச் செய்யவேண்டும்; நாம் இளையம் என்று நினைப்பதற்கு இல்லை; இளமையிலும் சாவு நேரிடக்கூடும். சூறைக்காற்று அடிக்கும்போது, மரத்திலுள்ள காய்கனிகளில், காய் கீழே உதிர்தலும், கனி தப்பி இருத்தலும் கூடும் எனும் திருஷ்டாந்தம் இங்கு கூறப்பட்டது. பிறிது மொழிதல் எனும் அணியாகும்.

'அறிவாம்'-தன்மைப் பன்மை எதிர்கால வினைமுற்று; 'இளையம்'-தன்மைப் பன்மைக் குறிப்பு வினைமுற்று. தெரிநிலை வினை, காலம் கட்டும்; குறிப்புவினை, காலம் காட்டாது. 'கைத்து'-கையிலுள்ள பொருள்; ஒன்றன்பாற் குறிப்புவினையாலணையும் பெயர் 'கரவாது'-எதிர்மறை வினையெச்சம். 'செய்ம்மின்'-ஏவற்பன்மை; 'உண்டு' குறிப்புவினைமுற்று; இருதிணை ஐம்பால் மூவிடங்களிலும் வரும், வேறு, இல்லை எனும் சொற்களும் இவ்வாறே வழங்கும்.

அரிய மொழிகள்:—கைத்து-கையிலுள்ளது; கரவாது-ஒளியாமல்; வளி-காற்று. (2)

## 3. யாக்கை நிலையாமை

மலைமிசைத் தோன்றும் மதியம்போல் யானைத்
தலைமிசைக் கொண்ட குடையர்—நிலமிசைத்
துஞ்சினார் என்றெடுத்துத் தூற்றப்பட் டாரல்லால்
எஞ்சினார் இவ்வுலகத்தில். (3)

(ப-ரை) மலைமிசை-மலையின்மீது, தோன்றும்-விளங்கும், மதியம்போல்-பூர்ண சந்திரனைப்போல், யானை தலைமிசை-யானையின் தலைமீது, கொண்ட-இருக்கப்பெற்ற, குடையர்-வெண்குடையராய் விளங்கும் அரசர்களும், நிலம் மிசை-நிலத்தின்மீது (பூமியில்), துஞ்சினார் என்று-இறந்தார்களென்று, எடுத்து தூற்றப்பட்டார் அல்லால்-(எல்லோராலும்) எடுத்து உரைக்கப்பட்டார்களே அன்றி, எஞ்சினார்-மரணத்தினின்று தப்பியவர்கள், இ உலகத்து இல்-இவ்வுலகத்தில் இல்லையாகும்.

குறிப்பு:—யானைமீது வீற்றிருந்து வெண்கொற்றக்குடை தாங்கும் பேரரசர்களும் இறப்பர் என்றபடி. யானையின்மீது விளங்கும் வெண்குடைக்கு, மலைமீது தோன்றும் மதியம் உவமையாகக் கொள்ளப்பட்டது. முன்னிரண்டு அடிகளில் உவமையணி இருத்தல் காண்க.

'மதியம்': அம்-சாரியை; துஞ்சுதல்-தூங்குதல்; இங்கு இறத்தலைக் குறித்தது (மங்கல வழக்கு எனப்படும்); 'அல்லால்' எதிர்மறைக் குறிப்பு வினையெச்சம்.

யாக்கை-கட்டுதல்; (தொழிற்பெயர்) 'யா' பகுதி, 'க்கை' தொழிற்பெயர் விகுதி; எலும்பு, சதை, தோல் முதலியவற்றால் கட்டப்பட்ட சரீரத்தைக் குறித்தது.

அரிய மொழிகள்:—யாக்கை-சரீரம்; மதியம்-சந்திரன்; எஞ்சினார்-தப்பினார். (3)

## 4. அறன்வலி

உறக்கும் துணையதோர் ஆலம்வித் தீண்டி
இறப்ப நிழல்பயந் தாஅங்—கறப்பயனும்
தான்சிறி தாயினும் தக்கார்கைப் பட்டக்கால்
வான்சிறிதாப் போர்த்து விடும். (4)

(ப-ரை) உறக்கும் துணையது-கிள்ளி எடுக்கும் தன்மையதான (நுண்ணிய உருவம்வாய்ந்த), ஓர் ஆலம்வித்து-ஆலமரத்தின் ஒரு (சிறிய) விதை, ஈண்டி-(செழித்து) வளர்ந்து, இறப்ப-நிழல் பயந்தாங்கு-மிகுதியாக நிழலைத்தருதல்போல, அறம்பயனும்-அறத்தால் உண்டாகும் பலனும், தான் சிறிதாயினும்-கொஞ்சமாக இருந்தபோதிலும், தக்கார் கை பட்டக்கால்-நல்லோர்கையில் போய்ச் சேருமாகில், (அந்த அறம்), வான்சிறிது ஆ-ஆகாயமும் சிறிதாகும்படி போர்த்து விடும்-பரவிவிடும்.

குறிப்பு:—அறன்வலி-தருமத்தின் மாண்பு; இடமறிந்து அறம் புரிய வேண்டும்; அறப்பொருளை ஸத்பாத்திரத்தில் உபயோகித்தால்,

அது வெகு சிறிதாயிருந்தபோதிலும் பெரும் பயனைத்தரும். சிறிய அறப்பயனுக்கு நுண்ணிய ஆலம்வித்தும், அந்த அறப்பயன் நெடுந் தூரம் பரவுதற்கு ஆலின் நிழலும் உவமை கூறப்பட்டன. இது உவமையணியாகும்.

'ஆலம்வித்து': அம்-சாரியை; ஈண்டி: இறந்த காலவினையெச்சம்; இறப்ப என்பது பயந்து என்பதோடு இயையும்; பயந்தாஅங்கு: அளபெடை.

அரிய மொழிகள்:—உறக்கும்-கிள்ளி எடுக்கும்; இறப்ப-மிகுதிபாக; தக்கார்-நல்லோர்; மேலோர்; வான்—ஆகாயம். (4)

## 5. தூய்தன்மை

தக்கோலம் தின்று தலைநிறையப் பூச்சூடிப்
பொய்க்கோலம் செய்ய ஒழியுமோ—எக்காலும்
உண்டி வினையுள் உறைக்கும் எனப்பெரியோர்
கண்டுகை விட்ட மயல். (5)

(ப-ரை) எக்காலும்-எப்பொழுதும், உண்டிவினையுள்-உண்ணும் காரணத்தால், உறைக்கும் என-உறுதிபெறும் என்று, பெரியோர்-மேலோர், கண்டு-(யாக்கையின் நிலைமையை உள்ளபடி) அறிந்து, கைவிட்ட-வெறுத்து விலக்கிய, மயல்-செத்தையைப்போன்ற சரீரத்தின் அசுத்தங்கள், தக்கோலம் தின்று-வால்மிளகு முதலிய வாசனைப் பண்டங்களை மென்று தின்பதாலும், தலைநிறைய பூ சூடி-தலைமயிர் நிரம்ப வாசனை மலரைச் சூட்டிக்கொண்டு, பொய் கோலம் செய்ய-வீணான அழகு செய்துகொள்வதனால், ஒழியுமோ-நீங்குமோ? (நீங்காது).

குறிப்பு:—தூய்து+அன்மை=தூய்தன்மை; யாக்கை தூய்மை இல்லாமையைக் கூறும்; தக்கோலம்: பஞ்சவாசத்தில் ஒன்று; "தக்கோலந் தீம்புத் தகைசா லிலவங்கங் கற்பூரஞ் சாதியோ டைந்து" என்பன ஐந்து முகவாசப்பண்டங்களாகும். இவைந்து உபலக்ஷணத்தால் ஏனைய நான்கினையும் குறித்தது. எத்தகைய பரிமளங்களை உபயோகித்தபோதிலும் சரீரம், அசுத்தமேமிகுந்திருக்கும். 'சோற்றுலெடுத்த சுவர்' என்றபடி 'எக்காலும் உண்டி வினையுளுறைக்கும்' என இழித்துக் கூறப்பட்டது. ஒழியுமோ: ஓகாரம் எதிர்மறைப்பொருள்.

அரிய மொழிகள்:—தக்கோலம்-வால்மிளகு; உண்டி-உணவு; மயல்-தூரால்; செத்தை. (5)

## 6. துறவு

**விளக்குப் புகஇருள் மாய்ந்தாங் கொருவன்**
**தவத்தின்முன் நில்லாதாம் பாவம்--விளக்குநெய்**
**தேய்விடத்துச்சென் றிருள் பாய்ந்தாங்கு நல்வினை**
**தீர்விடத்து நிற்குமாம் தீது. (6)**

(ப-ரை) விளக்கு புக-தீபம் (ஓரிடத்தில்) பிரவேசிப்பதால், இருள் மாய்ந்தாங்கு-(முன்னம் அங்கு இருந்த) இருட்டு ஒழிதல் போல, ஒருவன் தவத்தின் முன்-ஒருவன் செய்யும் தவத்திற்கு எதிரில், பாவம் நில்லாது-தீவினை அழியும்; விளக்கு நெய் தேய்விடத்து-விளக்கு எரிதற்குக் காரணமான எண்ணெய் குறையுமாயின், இருள் சென்று பாய்ந்தாங்கு-இருட்டு (அவ்விடத்தில்) போய் சூழ்தல்போல, நல்வினை தீர்விடத்து-நல்வினைக்குக் காரணமான துறவறம் நீங்குமாயின், தீது நிற்கும்-(பாவம்) தீவினை வந்து தோன்றும்.

குறிப்பு:—துறவு-இவ்வுலக ஆசையைத் துறத்தல்; துறவினால் நேரும் நலமும், அஃது இல்லாதபோது விளையும் தீமையும் இங்கு விளக்கப்பட்டன. துறவறத்திற்கு விளக்கும், பாவத்திற்கு இருளும் உபமானமாகக் கொள்ளப்பட்டன. இஃது உவமையணி ஆகும்.

விளக்கு: பொருள்களை விளங்கச்செய்வது; ஆங்கு-போல எனும் பொருள்கொண்ட உவமை யுருபு. இரண்டாம் அடியிலும் நான்காம் அடியிலும் உள்ள 'ஆம்' என்பது அசை; புக-முக்காலத்திற்கும் பொதுவான வினையெச்சம்.

அரிய மொழிகள்:—மாய்ந்து-அழிந்து; இருள்-இருட்டு. (6)

## 7. சினமின்மை

**கூர்த்துநாய் கௌவிக் கொளக்கண்டும் தம்வாயால்**
**பேர்த்துநாய் கௌவினார் ஈங்கில்லை—நீர்த்தன் றிக்**
**கீழ்மக்கள் கீழாய சொல்லியக்கால் சொல்பவோ**
**மேன்மக்கள் தம்வாயால் மீட்டு. (7)**

(ப-ரை) கூர்த்து-கோபம் மிகுந்து, நாய் கௌவிக்கொளக்கண்டும்-நாய் கௌவிக் கடிக்கப் பார்த்தும், தம் வாயால்-தமது வாயால், பேர்த்துநாய் கௌவினார்-(கோபத்தால்) மனம்மாறுபட்டு அந்நாயைக் கடித்தவர்கள், ஈங்கு இல்லை-இவ்வுலகத்தில் இல்லை; (அதுபோல) நீர்த்து அன்றி-நற்குணம் இல்லாமையால், கீழ்மக்கள் கீழாய சொல்லியக்கால்-கீழோர் (அற்பர்) இழிவான சொற்களைச் சொல்வார்களாயின், மேன்மக்கள்-மேலோர், தம் வாயால்-தங்கள் வாயால், மீட்டு-

(சினம்மிகுந்து) மாறுபட்டு, சொல்பவோ-சொல்வார்களோ? (சொல்ல மாட்டார்கள்).

குறிப்பு:—கீழ்மக்களுக்கு நாய் உபமானமாகக் கூறப்பட்டது. கீழோர் இழிவான கொடிய சொற்களைச்சொல்வார்களாயின், மேலோர் அதற்காகச் சினம்கொண்டு யாதொரு கடுஞ் சொற்களும் எதிராகச் சொல்லமாட்டார்கள் என்றபடி. நாய் கடிக்குமாயின், அதனை மீண்டும் கடிப்பாரில்லை. இங்ஙனம் கூறியது எடுத்துக்காட்டுவமையணி ஆகும்.

நீர்த்து: ஒன்றன்பால் குறிப்பு வினையாலணையும் பெயர்; 'நீர்மை' எனும் பண்பினின்று பிறந்தது; ஆய: ஆகிய என்பதின் சிதைவு; சொல்லியக்கால்: எதிர்கால வினையெச்சம்; சொல்ப: பலர்பால் வினை முற்று; ('ப' பலர்பால் விகுதி; எதிர்காலம் உணர்த்திற்று).

அரிய மொழிகள்:—கூர்த்து-மிகுந்து ; பேர்த்து-மாறுபட்டு ; நீர்த்து-குணமுடையது; மீட்டு-மீண்டு. (7)

## 8. பொறை யுடைமை

வேற்றுமை யின்றிக் கலந்திருவர் நட்டக்கால்
தேற்ரு ஒழுக்கம் ஒருவனகண் உண்டாயின்
ஆற்றும் துணையும் பொறுக்க பொருருயின்
தூற்ருதே தூர விடல். (8)

(ப-ரை) இருவர்-இரண்டுபேர், வேற்றுமை இன்றி-மனத்தில் மாறுபாடு இல்லாமல், கலந்து-மனம் ஒருமித்து, நட்டக்கால்-சினேகம் செய்தால், (அதன்பின்), ஒருவன்கண்-ஒருவனிடத்து, தேற்ரு ஒழுக்கம்-நம்பமுடியாத தீயநடத்தை, உண்டாயின்-தோன்றுமானல், ஆற்றும் துணையும்-கூடுமானவரையில், பொறுக்க-(மற்ருெருவன்) பொறுப்பானக: பொருன் ஆயின்-பொறுக்கக்கூடாமல்(மனம்நொந்து) இருப்பானயின், தூற்ருதே-(நண்பனது குற்றத்தை) பலர் அறிய எடுத்து உரையாமல், தூரவிடல்-(அவனது நட்பை) விலக்கக்கடவன்.

குறிப்பு:—நட்பிற்கு அழகு, பிழை பொறுத்தல் என்றபடி: இஃது இல்லையாயின் நண்பனைத் தூற்ருது விலக்கிவிடுதல் நலமாகும். ஆகவே பொறையின் சிறப்பு நட்பில் அடங்கியபடி.

நட்டக்கால்: 'நள்' என்னும் பகுதியினடியாகப் பிறந்த எதிர்கால வினையெச்சம்: தேற்ரு: ஈறுகெட்ட எதிர்மறைப் பெயரெச்சம்: ஒழுக்கம்: பண்புப்பெயர்: ஒருவன்கண்: 'கண்' ஏழனுருபு: பொறுக்க: வியங்கோள் வினைமுற்று: 'க' விகுதி: தூற்ருது: எதிர்மறை வினையெச்சம்.

அரிய மொழிகள்:—வேற்றுமை-வேறுபாடு; நட்டல்-சினேகித்தல். (8)

## 9. ஈகை

கடிப்பிடு கண்முரசம் காதத்தோர் கேட்பர்
இடித்து முழக்கியதோர் யோசனையோர்—கேட்பர்
அடுக்கிய மூவுலகும் கேட்குமே சான்றோர்
கொடுத்தார் எனப்படும் சொல். (9)

(ப-ரை) கடிப்பு-குறுந்தடியால், இடு-அடிக்கப்பட்ட, கண்முரசம்-கண்ணையுடைய முரச வாத்தியத்தின் ஒலியை, காதத்தோர்-ஒரு காததூரத்தில் உள்ளவர்கள், கேட்பர்-காதில் கேட்பார்கள்; இடித்து முழக்கியது-(மேகத்தினின்று) உண்டாகும் இடி ஓசையை, ஓர் யோசனையோர் கேட்பர்-ஒரு யோசனை தூரத்திலுள்ளவர் கேட்பார்கள்; சான்றோர்-பெரியோர், கொடுத்தார் எனப்படும் சொல்-(வறியோர்க்குப்) பொருள் உதவினர் எனும் சொல்லோவெனில், அடுக்கிய மூவுலகம்-அடுக்காக உள்ள மூன்று உலகத்தில் வாழ்பவர்க்கும், கேட்கும்-கேட்கக்கூடியதாகும்.

குறிப்பு:—ஈகையால் உண்டாகும் புகழ் மூன்று உலகத்திலும் பரவும் என்றபடி: கடிப்பு-பேரிகை அடிக்கும் சிறு கழி; கண்-இடம்; முகம் எனினும் பொருந்தும்; காதம்-ஏழரை நாழிகை வழி; யோசனை-காதத்தினும் மிகுந்த நெடுந்தூரம்; அடுக்கிய மூவுலகு-விண்ணுலகம், மண்ணுலகம், பாதாள உலகம் என்று அடுக்காக உள்ள மூன்று உலகங்கள். முரசம்: 'முரஜம்' எனும் வடசொல்லின் திரிபு. முதல் அடியில் முற்றுமோனை இருத்தல் காண்க.

அரிய மொழிகள்:—கடிப்பு-குறுந்தடி; முரசம்-பேரிகை; சான்றோர்-மேலோர். (9)

## 10. பழவினை

வளம்பட வேண்டாதார் யார்யாரும் இல்லை
அளந்தன போகம் அவரவர்—ஆற்றான்
விளங்காய் திரட்டினார் இல்லைக் களாங்கனியைக்
காரெனச் செய்தாரும் இல். (10)

(ப-ரை) வளம்பட-(செல்வம் முதலியவற்றால்) நல்வாழ்வு பெற, வேண்டாதார்-விரும்பாதவர், யார்-எவர்? யாரும் இல்லை-எவரும் இல்லையாகும்; (ஆயினும்), போகம்-சுகம், அவர் அவர் ஆற்றான்-அவரவர் ஊழ்வினையால் ஏற்பட்டபடி, அளந்தன-அளவிடப்பட்டுள்ளன; விள காய் திரட்டினார் இல்லை-விளாங்காயை உருட்சியாகச் செய்த

வர் எவரும் இல்லை; கனி கனியை-களாப்பழத்தை, கார் என செய் தாரும் இல்-கருமையாகச் செய்தவரும் இல்லை.

குறிப்பு:—பழவினை-ஊழ்; அவரவர் செய்த நல்வினை தீவினை யால் ஏற்பட்ட ஊழின்படி இன்ப துன்பங்கள் அனைவர்க்கும் நிக ழும் என்றபடி; வேண்டாதார்: எதிர்மறை வினையாலணையும் பெயர்; யார்: குறிப்பு வினு; ஆறு-வழி (ஊழின் வழி); இல், இல்லை; குறிப்பு வினைமுற்றுக்கள். (10)

## 11. மெய்ம்மை

இடம்பட மெய்ஞ்ஞானம் கற்பினும் என்றும்
அடங்காதார் என்றும் அடங்கார்—தடங்கண்ணுய்
உப்பொடு நெய்பால் தயிர்காயம் பெய்தடினும்
கைப்பறு பேச்சுரையின் காய். (11)

(ப-ரை) தட கண்ணுய்-அகன்ற கண்கள் வாய்ந்தவளே! அடங் காதார்-அடங்கியிருக்கும் தன்மையில்லாதவர், மெய் ஞானம்-உண் மையான ஞானத்தை விளக்கும் நூல்களை, இடம்பட-மிகுதியாக, என்றும் கற்பினும்-எந்நாளும் கற்றபோதிலும், என்றும் அடங்கார்-எப்பொழுதும் அடங்கமாட்டார்கள்; (எதுபோல எனின்) உப்பொடு நெய் பால் தயிர் காயம் பெய்து-உப்பு, நெய், பால், தயிர், பெருங் காயம் ஆகிய இவைகளைத் தனித் தனியே சேர்த்து, அடினும்-சமைத்தபோதிலும், பேய்ச் சுரையின் காய்-பேய்ச் சுரைக்காய்கள் கைப்பு அறு- கசப்பு ஒழியமாட்டா.

குறிப்பு:—அடக்கம் பெறுதார், ஞான நூல்களைச் கற்றும் யாதொரு வேறுபாடுமின்றி, என்றும் அவ்வாறே இருப்பர் என்ற படி; இன்னோர்க்கு உவமையாகப் பேய்ச் சுரைக்காயின் தன்மை எடுத்துக் காட்டப்பட்டது. இஃது எடுத்துக் காட்டு வமையணி ஆகும். கற்பினும், அடினும்: 'உம்'-உயர்வு சிறப்பு; தடங் கண்ணுய்: விளிவேற்றுமை; மகடூஉ முன்னிலை: ஒரு பெண்ணையேனும், ஓர் அரசனையேனும், பொதுவாக உலகத்தையேனும் முன்னிலைப்படுத்தி ஒரு நீதியை எடுத்து உரைத்தல் கவிகள் மரபு; மகடூஉ - பெண்: அறு: எதிர்மறைப் பலவின்பால் வினைமுற்று.

அரிய மொழிகள்:—இடம்பட - மிகுதியாக; அடினும்-சமைத்த போதிலும்; அறு-நீங்கா. (11)

## 12. தீவினையச்சம்

**துக்கத்துள் தூங்கித் துறவின்கண் சேர்கலா**
**மக்கள் பிணத்த சுடுகாடு—தொக்க**
**விலங்கிற்கும் புள்ளிற்கும் காடே புலங்கெட்ட**
**புல்லறி வாளர் வயிறு. (12)**

(ப-ரை) சுடுகாடு-மயானங்கள், துக்கத்துள்-குடும்பத்துன்பங்களில், தூங்கி-உழன்று (அலைந்து தவித்து), துறவின்கண்-துறவறத்தில், சேர்கலா-சேராத, மக்கள்-மனிதர்களுடைய, பிணத்த-பிணங்களைக்கொண்டன ஆகும்; புலம்கெட்ட-நல்லறிவு இல்லாத (மாமிசம் உண்கின்ற), புல் அறிவாளர்-அற்ப அறிவுள்ளவர்களது, வயிறு-வயிறுகளோ எனில், தொக்க-தொகுதியான, விலங்கிற்கும்-மிருகங்களுக்கும், புள்ளிற்கும்-பட்சிகளுக்கும், காடே-(உரிய) சுடுகாடுகளே ஆம்.

குறிப்பு:—தீவினையச்சம்-தீயதொழில்களைச் செய்ய அஞ்சுதல்; புலால் உண்ணல் தீவினை யென்றும், அதனை அஞ்சி ஒழிக்கவேண்டுமென்றும், இதனால் ஏற்படும். இல்லறத்திலுள்ளவர்கள் இறப்பரேல், அவர்களைச் சுடுகாட்டில் இட்டு எரிப்பது வழக்கம்; ஆனால் துறவிகள் உயிர் துறப்பரேல், அன்னோரது உடலை அங்ஙனம் எரிப்பதில்லை; அதனைப் புனிதமாகப் போற்றி அடக்கம் செய்வது எங்குமுள்ள வழக்கம்; ஆதலால் துறவிகளை விலக்கி இல்லறத்தாரைமட்டும் இங்கு கூறினார். 'புலங்கெட்ட' என்றதற்கு, 'ஆன்மஞானம் இல்லாத' என்றும், 'புல்லறிவாளர்' என்றதற்கு, 'உறங்கல், எழுதல், நடத்தல், உழைத்தல், உண்ணல், உரையாடல் முதலிய சாமானிய அறிவைப் பெற்ற' என்றும் பொருள்கொள்ளல் வேண்டும்.

சேர்கலா: ஈறுகெட்ட எதிர்மறைப் பெயரெச்சம்; 'கல்'-ஆற்றல் உணர்த்தும் விகுதி; மக்கள்: எப்பொழுதும் பன்மையிலேயே வழங்கும் சொல்; பிணத்த: பலவின்பால் குறிப்பு வினைமுற்று; தொக்க: இறந்தகாலப் பெயரெச்சம்; 'தொகு'பகுதி; ஒற்று இரட்டித்து இறந்தகாலம் காட்டிற்று. சுடுகாடு, விலங்கு, புள், காடு, வயிறு: இவை பால்பகா அஃறிணைப் பெயர்களாம்: ஒன்றன்பால், பலவின்பால் ஆகிய இரண்டு பால்களிலும் வழங்கிவரும். புன்மை+அறிவாளர் = புல்லறிவாளர் (பண்புப் புணர்ச்சி). (12)



# பொருட்பால்.

## 13. கல்வி

களர்நிலத் துப்பிறந்த உப்பினைச் சான்றோர்
விளைநிலத்து நெல்லின் விழுமிதாக் கொள்வர்
கடைநிலத்தோர் ஆயினும் கற்றறிந் தோரைத்
தலைநிலத்து வைக்கப் படும். (13)

(ப-ரை) களர் நிலத்துப் பிறந்த-(இழிவான) உவர்நிலத்தில் உண்டான, உப்பினை-உப்பை, சான்றோர்-மேலோர், விளை நிலத்து நெல்லின்-(சிறந்த) விளைநிலத்தில் உண்டாகும் நெல்லைவிட, விழுமிது ஆ-மேலானதாக, கொள்வர்-கொள்வார்கள்; (அங்ஙனமே), கடைநிலத்தோர் ஆயினும்-தாழ்ந்த சாதியிற் பிறந்தவர்களானாலும், கற்று அறிந்தோரை-கற்று உணர்ந்தவர்களை, தலைநிலத்து-பெருமைவாய்ந்த இடத்தில், வைக்கப்படும்-வைத்து மேன்மைப்படுத்தவேண்டும்.

குறிப்பு:—பிறப்பினால் ஒருவனுக்குக் கௌரவம் உண்டாகாது; தான் கற்ற கல்வியினாலேயே பெருமை உண்டாகும். கல்வியைப் பெறாதார், எத்தகைய நலம் வாய்ந்தவராயினும் பெருமை அடையார் என்றபடி: உப்பின் சுவை இல்லாத உணவு எவ்விதத்திலும் சிறக்காது; அதுபோல, கல்வியறிவு பெறாத மாந்தரும் கௌரவம் அடையார். இங்ஙனம் கூறியது எடுத்துக்காட்டுவமையணியாகும்.

உப்பினை: 'இன்' சாரியை; விளைநிலம்: வினைத்தொகை; விழுமிது: 'விழுமம்' எனும் உரிச்சொல்லினின்று பிறந்தது; விழுமம்-பெருமை; கற்றறிந்தோரை: வினையாலணையும் பெயர்; வைக்கப்படும்:' வியங்கோள் வினைமுற்று (செய்வினை). (13)

## 14. குடிப்பிறப்பு

உடுக்கை உலறி உடம்பழிந்தக் கண்ணும்
குடிப்பிறப் பாளர்தம் கொள்கையின் குன்றார்
இடுக்கண் தலைவந்தக் கண்ணும் அரிமா
கொடிப்புல் கறிக்குமோ மற்று. (14)

(ப-ரை) உடுக்கை-உடுக்கும் ஆடை, உலறி-பாழாகி, உடம்பு அழிந்தக்கண்ணும் (உணவுஇன்மையால்) உடம்புமெலிந்து பாழாயின போதும், குடிபிறப்பு ஆளர்-உயர் குடியிற்பிறந்தோர், தம் கொள்கையின் குன்றார்-தமது குலத்திற்கு ஏற்ற ஒழுக்கத்தினின்றும் தவறமாட்டார்கள்; (எதுபோலவெனில்), இடுக்கண்-(பசியாலாகிய) துன்பம்,

தலைவந்தக்கண்ணும்-மிகுந்தபோதும்; அரிமா-சிங்கம், கொடி புல்-கொடியாகப்படர்ந்த புல்லை, கறிக்குமோ-தின்னுமோ? (தின்னாது).

குறிப்பு:—பசி மிகுந்தபோதிலும் சிங்கம் புல்லைத் தின்னாது; அதுபோலவே, நல்ல குடியிற் பிறந்தோர் வறுமையால் வருந்தி உணவு இன்றி உடல் மெலிந்த தருணத்திலும் தங்கள் நல்லொழுக்கத்தினின்றும் விலகார் என்றபடி: இங்ஙனம் கூறியது எடுத்துக்காட்டு வமையணியாகும்:

உடுக்கை: தொழிலாகு பெயர்; கொள்கையின். 'இன்' ஐந்தாம் வேற்றுமை உருபு நீக்கப்படு பொருளில் வந்தது; அரிமா: இருபெயரொட்டுப் பண்புத் தொகை; மற்று. அசை:

அரிய மொழிகள்:—உடுக்கை-வஸ்திரம்; உலறி-கெட்டு, இடுக்கண்-துன்பம்; அரிமா-சிங்கம்; கறிக்குமோ-உண்ணுமோ? (14)

## 15. மேன்மக்கள்

கள்ளார்கள் உண்ணார் கடிவ கடிந்தொரீஇ
எள்ளிப் பிறரை இகழ்ந்துரையார்—தள்ளியும்
வாயிற்பொய் கூறார் வடுவறு காட்சியார்
சாயின் பரிவ திலர். (15)

(பத-ரை) வடு அறு காட்சியார்-குற்றம் அற்ற அறிவு வாய்ந்த மேன்மக்கள், கள்ளார்-களவாட மாட்டார்கள், கள் உண்ணார்-கள் குடிக்கமாட்டார்கள்; கடிவ-விலக்கத்தக்க இழிதொழில்களை, கடிந்து ஒரீஇ-வெறுத்து விலக்கி, பிறரை எள்ளி-பிறரை அலக்ஷியம் செய்து, இகழ்ந்து உரையார் - இகழ்ச்சியாகப் பேசமாட்டார்கள்; தள்ளியும்-மறந்தும, வாயின் பொய் கூறார்-வாயால் பொய் பேசார்; சாயின்-தளர்ச்சி அடைந்தபோதும், பரிவது இலர்-வருந்தார்.

குறிப்பு:—மேன்மக்களின் மாண்பு உதாரணமுகத்தால் கூறப்பட்டது; கள்ளார், உண்ணார். உரையார், கூறார், இலர்: இவை எதிர்மறைப் பலர்பால் வினைமுற்றுக்கள்; ஒரீஇ: அளபெடை; வாயின்: 'இன்' ஐந்தனுருபு; மூன்றும்வேற்றுமைப் பொருள் கொண்டது (உருபுமயக்கம்).

அரிய மொழிகள்:—கடிந்து-விலக்கி; எள்ளி-அவமதித்து; வடு-குற்றம்; பரிவது-வருந்துவது. (15)

## 16. பெரியாரைப் பிழையாமை

விரிநிற நாகம் விடருள தேனும்
உருமின் கடுஞ்சினம் சேணின்றும் உட்கும்
அருமை யுடைய அரண்சேர்ந்தும் உய்யார்
பெருமையுடையார் செறின். (16)

(ப-ரை) விரி-படம் விரிக்கும் தன்மையுள்ள, நிறம் நாகம்-பிர காசம் பொருந்திய சர்ப்பம், விடர் உளது எனும்-நிலத்தின் வெடிப்பி னுள்ளே இருந்தபோதிலும், உருமின் கடு சினம்-இடியினது கடுமை யான கோபமெனும் ஒலி, சேண் நின்றும்-(ஆகாயத்தில்) வெகுதூரத் தில் இருந்தும், உட்கும்-பயப்படும்; (அதுபோல), பெருமை உடை யார் செறின்-பெரியோர்கள் கோபிப்பார்களாயின், (அவர்க்குப் பிழை செய்தவர்கள்) அருமை உடைய அரண் சேர்ந்தும்-அரிய காவல் கொண்ட இடத்தில் வசித்தபோதிலும், உய்யார்-(அப்பெரியோர் களது கோபத்திற்குத் தப்பி) பிழைக்கமாட்டார்கள்.

குறிப்பு:—பெரியோர்க்குக் கோபம் வரின் பெருங் கேடுவிளை யும்; ஆதலால் அவர்களுக்கு யாதொரு தீங்கும் செய்தல் கூடாதாகும். இடியோசை கேட்டு நடுங்குதல் பாம்பின் இயற்கை; இது இங்கு உப மானமாக எடுத்துக் காட்டப்பட்டது. இங்ஙனம் கூறியது எடுத்துக் காட்டுவமையணியாகும். கடுஞ் சினம்: பண்புத் தொகை; செறின்: எதிர்கால வினையெச்சம்.

அரிய மொழிகள்:—விடர் - நிலத்தின் வெடிப்பு; உரும் - இடி; சேண்-நெடுந்தூரம்; உட்கும்-அஞ்சும்; செறின்-கோபித்தால். (16)

## 17. நல்லினம் சேர்தல்

ஒண்கதிர் வாண்மதியம் சேர்தலால் ஓங்கிய
அங்கண் விசும்பின் முயலும் தொழப்படூஉம்
குன்றிய சீர்மையர் ஆயினும் சீர்பெறுவர்
குன்றன்னார் கேண்மை கொளின். (17)

(ப-ரை) ஓங்கிய-உயர்ந்த, அம் கண் விசும்பின்-அழகிய இடங் கொண்ட ஆகாயத்தில், ஒள்-(குளிர்ச்சியோடு) விளங்குகின்ற, வாள் மதியம்-ஒளி பொருந்திய சந்திரனை, சேர்தலால்-சேர்ந்திருப்பதால், முயலும்-முசலும், தொழப்படூஉம்-(எல்லோராலும்) வணங்கப்படும்; (அதுபோல), குன்றிய சீர்மையராயினும்-குறைந்த மதிப்புள்ளவரா யிருந்தபோதிலும், குன்று அன்னார்-மலைபோன் மிகுந்த பெருமை யுள்ள மேலோர்களது, கேண்மை-சினேகத்தை, கொளின்-கொண் டால், சீர் பெறுவர்-(தாமும்) பெருமை அடைவர்.

குறிப்பு:—சந்திரனிடத்திலுள்ள களங்கத்தை,மானாகவும்,முயலா கவும், மலையாகவும், வருணித்தல் கவிகளின் இயல்பாகும். ஆகவே, சந்திரனை அடைந்த முயலும் தொழப்படுதல் போல, நல்லோருடன் கூடியிருப்பின், சீர்மை குறைந்தவரும் சீர் பெறுவர் என்றபடி. குன் றன்னார்க்கு வாண்மதியமும், குன்றிய சீர்மையர்க்கு முயலும்,உவமை யாகக் கொள்ளப்பட்டன. இஃது எடுத்துக்காட்டுவமையணியாகும்.

ஒள் + கதிர் = ஒண்கதிர்; வாள் + மதியம் = வாண்மதியம்; குன்று + அன்னார் = குன்றன்னார்; (சந்திவிதி கவனிக்கத்தக்கது); தொழப்படூஉம்: அளபெடை; சீர்மை, கேண்மை: பண்புப்பெயர்கள்; அன்னார்: குறிப்பு வினையாலணையும் பெயர். கடைசி அடியில் முற்று மோனை வந்திருத்தல் காண்க:

அரிய மொழிகள்:-மதியம்-சந்திரன்; விசும்பு-ஆகாயம்; அன்னார்-போன்றவர்; கேண்மை-சினேகம். (17)

## 18. பெருமை

**கடுக்கி ஒருவன் கடுங்குறளை பேசி**
**மயக்கி விடினும் மனப்பிரிபொன் றின்றித்**
**துளக்கம் இலாதவர் தூய மனத்தார்**
**விளக்கினுள் ஒண்சுடரே போன்று. (18)**

(ப-ரை) ஒருவன்-ஒருத்தன், கடுக்கி-(முகம்) சுளித்து, கடு குறளை பேசி-கடுமையான கோட்சொற்களைப்பேசி, மயக்கிவிடினும்-மயங்கச் செய்தாலும், மனம் பிரிப்பு ஒன்று இன்றி-மனத்தில் மாறுபாடு சிறிதும் இல்லாமல், துளக்கம் இலாதவர்-(மனத்தில்) கலக்கமில்லாதவர்களே, விளக்கினுள் ஒள் சுடரே போன்று-விளக்கிலுள்ள பிரகாசமான சுவாலையைப்போல, தூய மனத்தார் - பரிசுத்தமான மனம் வாய்ந்தவர் ஆவர்.

குறிப்பு:—பிறர்கூறும் கோட் சொற்களைக் கேட்டு மனம் மாறுபடாமலிருப்பது பெருந்தன்மைக்குக் காரணமாகும். ஆகவே தூய மனத்தார் எவற்றையும் தாமே நேரில் அறிந்து தெளிவர் என்றபடி.

கடுக்கி, பேசி, மயக்கி: இவை இறந்தகால வினையெச்சம்; 'இ' விகுதி; விகுதியே காலங்காட்டிற்று; இலாதவர்: எதிர்மறை வினையாலணையும் பெயர்; தூய: குறிப்புப் பெயரெச்சம்; 'தூய்மை' எனும் பண்பினடியாகப் பிறந்தது.

அரிய மொழிகள்:—கடுக்கி-முகம் சுளித்து; குறளை-பழிப்பான சொல்; பிரிப்பு-மாறுபாடு; துளக்கம்-கலக்கம்; தூய-பரிசுத்தமான; போன்று-போல. (18)

## 19. தாளாண்மை

**ஆடுகோ டாகி அதரிடை நின்றதூஉம்**
**காழ்கொண்ட கண்ணே களிறணைக்கும் கந்தாகும்**
**வாழ்தலும் அன்ன தகைத்தே ஒருவன்தான்**
**தாழ்வின்றித் தன்னைச் செயின். (19)**

(ப-ரை) ஆடுகோடு ஆகி-அசைகின்ற இளங்கொம்பாகி, அதரிடை-வழியில், நின்றதூஉம்-நின்ற சிறுமரமும் காழ் கொண்ட கண்ணே-(வளர்ந்து) வயிரம் பெற்றபோது, களிறு அணைக்கும் கந்து ஆகும்-யானையைக் கட்டுதற்கு உரிய தறியாகும்; ஒருவன் தாழ்வின்றி தன்னை செயின்-ஒருவன் (தனது முயற்சியால்) தன்னுடைய நிலைமைக்குத் தாழ்வு வாராமல் பார்த்துக்கொள்வானாயின், வாழ்தலும் அன்ன தகைத்தே - (அவனுடைய) வாழ்க்கையும் அத்தன்மையதே ஆம்; (தான்-அசை).

குறிப்பு:—தாளாண்மை-முயற்சி, தன்னுடைய பெருமைக்குக் குறைவுவாராதபடி ஒருவன் முயற்சிசெய்வானாயின், அவன் நாளடைவில் உறுதியடையவனாவான். மரம் தானேவளர்ந்து உள்வயிரம் ஏறித்திண்மைபெறுதல் போல ஒவ்வொருவனும் தனது முயற்சியாலேயே சிறப்படையவேண்டும் என்றபடி. இச் செய்யுள் உவமையணி கொண்டிருத்தல் காண்க. இரண்டாம் அடியில் முற்றுமோனை வந்திருத்தல் உய்த்து நோககத்தக்கது.

ஆடுகோடு: வினைத்தொகை; நின்றதூஉம்: அளபெடை; வாழ்வு, தாழ்வு: எதிரிடைச்சொற்கள்; தகைத்து: குறிப்பு வினைமுற்று; செயின்: எதிர்கால வினையெச்சம்.

அரிய மொழிகள்:—கோடு-கொம்பு; அதா-வழி; காழ்-வயிரம்; களிறு-ஆண்யானை; கந்து-கட்டுத்தறி; தகைத்து-தன்மையது. (19)

## 20. சுற்றம் தழால்

நாள்வாய்ப் பெறினும்தம் நள்ளாதார் இல்லத்து
வேளாண்மை வெங்கருணை வேம்பாகும்—கேளாய்
அபரானப் போழ்தின் அடகிடுவ ரேனும்
தமரா யார் மாட்டே இனிது. (20)

(ப-ரை) நாள்வாய்-வேளையில், பெறினும் - கிடைப்பதானாலும், தம் நள்ளாதார் இல்லத்து-தமது உறவினர் அல்லாதார் வீட்டில், வேளாண்மை-உபகாரமாகக் கிடைத்த, வெம்கருணை-சூடானபொரிக் கறி (சேர்ந்த உணவும்), வேம்புஆகும்-வேம்புபோல் கைப்புடைய தாம்; கேளாய்-(யான் சொல்வதைக்) கேட்பாயாக; அபரானப்போழ்தின்-பிற்பகலில், அடகு இடுவரேனும்-கீரைமுதலான இலைக்கறியைச் சமைத்து இடுவாராயினும், தமர் ஆயார்மாட்டே-உறவினரது இல்லத்திலேயாயின், இனிது-அது இன்சுவை தருவதாகும்.

குறிப்பு:—சுற்றம் தழால-சுற்றத்தார்க்குத் துணையாதல்; உறவினர்களது இல்லத்தில் தாழ்ந்த உணவு காலம் தப்பிக் கிடைப்பதாயி

னும், அதுவே மேலானது. உறவுக்குக் காரணமாகிய அன்பு இல்லா தார் இடும் உணவு சிறந்ததாயினும், அது வெறுக்கத்தக்கதாகும்.

நள்ளாதார்: எதிர்மறை வினையாலணையும் பெயர்; 'நள்' பகுதி; வெங்கருனை: பண்புத் தொகை; இனிது: குறிப்பு வினைமுற்று; அப ரானம்: வடமொழி ('அபராந்ஹம்' என்பதன் திரிபு).

அரிய மொழிகள்:—கருனை-பொரிக்கறி; அபரானம்-பிற்பகல்; அடகு-இலை; தமர்-தம்மைச் சேர்ந்தவர் (உறவினர்). (20)

## 21. நட்பு ஆராய்தல்

**கருத்துணர்ந்து கற்றறிந்தார் கேண்மையெஞ் ஞான்றும்**
**குருத்தின் கரும்புதின் றற்றே—குருத்திற்[கு]**
**எதிர்செலத்தின் றன்ன தகைத்தரோ என்றும்**
**மதுர மிலாளர் தொடர்பு. (21)**

(ப-ரை) கருத்து உணர்ந்து-(உண்மை நூலின்) பொருளை அறி ந்து, கற்று அறிந்தார்-கற்றுத் தேர்ந்த பெரியோர்களது, கேண்மை-சினேகம், எஞ்ஞான்றும்-எப்பொழுதும், குருத்தின் கரும்பு தின்று அற்று-குருத்திலிருந்து கரும்பைத் தின்றதுபோலாம்; என்றும்-எப் பொழுதும், மதுரம் இலாளர் தொடர்பு-(கல்வி) நலம் இல்லாதவர்க ளது நட்பு, குருத்திற்கு எதிர் செல-குருத்திற்கு எதிராக, தின்று அன்ன தகைத்து-(கரும்பைத்) தின்றார்போலும்; (அரோ, ஏ: அசை).

குறிப்பு:—நுனிக் குருத்திலிருந்து அடிப்பாகம் வரையில் கருப் பங் கழியைத் தின்றுகொண்டுவந்தால், வரவர இனிப்பு அதிகமாகத் தோன்றும். அதுபோலவே கற்றறிந்தாரிடம் கொள்ளும் நட்பு நாளுக்குநாள் இன்பம் தரும். கரும்பை அடிப்பாகத்திலிருந்து நுனிக் குருத்துவரையில் தின்றுகொண்டேபோனால், போகப்போக இனிப் புக் குன்றி முடிவில் உவர்ப்பே தோன்றும். அதுபோலவே, அறிவில் லாதவரோடு செய்யும் சிநேகம் நாளடைவில் வெறுப்பை விளைக்கும்.

அற்று: குறிப்பு வினைமுற்று; தகைத்த: பலவின்பாற் குறிப்பு வினைமுற்று;

அரிய மொழிகள்:—கேண்மை - சினேகம்; மதுரம் - இனிப்பு; தொடர்பு-நட்பு. (21)

## 22. நட்பிற் பிழைபொறுத்தல்

**நல்லார் எனத்தாம் நனிவிரும்பிக் கொண்டாரை**
**அல்லார் எனினும் அடக்கிக் கொளல்வேண்டும்**
**நெல்லுக் குமியுண்டு நீர்க்கு நுரையுண்டு**
**புல்இதழ் பூவிற்கும் உண்டு. (22)**

(ப-ரை) நல்லார் என-நற்குணம் வாய்ந்தவரென்று, தாம் நனி விரும்பிக்கொண்டாரை-தாம் மிகவும் விரும்பு நட்புக்கொண்டவரை அல்லார் எனினும்-(பின்பு) நற்குணம் இல்லார் என ஏற்படுமாயினும், அடக்கிக்கொளல் வேண்டும்-(அவர் குற்றத்தைத் தூற்றுயல்) அடக்கிக்கொள்ளுதல் வேண்டும்; (ஏனெனில்), நெல்லுக்கு உமி உண்டு-நெல்லுக்கும் உமி யெனும் (குற்றம்) உண்டு; நீர்க்கு நுரை உண்டு-ஜலத்திற்கும் நுரை எனும் (குற்றம்) உண்டு; பூவிற்கும்-(சிறந்த) மலருக்கும், புல் இதழ் உண்டு-(விலக்கற்பால) புறவிதழ் உளதாகும்.

குறிப்பு:—சிறந்த பொருள்களிடத்திலும் ஏதேனும் ஒரு குற்றம் காணக் கிடைக்கும். பயனற்ற உமி, நெல்லுக்குக் குற்றமாகும்; அபரிசுத்தமான நுரை, சுத்தமான நீர்க்குக் குற்றமாகின்றது; மணம் தரும் மலர்க்கு, மணமற்ற அதன் புறவிதழ் குற்றமேயாம். இவை போல் இன்னும் பல உள. ஆகவே குற்றமே இல்லாதாரைக் காணுதல் அரிதாகும். நண்பரிடத்துக் குற்றம் காணின், அதனைப் பொறுத்தல் வேண்டும் என்றபடி.

நனி: உரிச்சொல்; கொண்டாரை: வினையாலணையும் பெயர்; உண்டு; குறிப்பு வினைமுற்று; இருதிணை ஐம்பால் மூவிடங்களிலும் வழங்கும். (22)

## 23. கூடா நட்பு

ஆன்படு நெய்பெய் கலனுள் அதுகளைந்து
வேம்படு நெய்பெய் தனைத்தரோ—தேம்படு
நல்வரை நாடநயமுணர்வார் நண்பொரீஇப்
புல்லறிவி னாரொடு நட்பு. (23

(ப-ரை) தேம் படு - இனிமை வாய்ந்த, நல்வரை நாட - சிறந்த மலை நாட்டுக்குரிய அரசனே! நயம் உணர்வார் நண்பு - நல்லோருடைய நட்பை, ஓரீஇ-நீக்கி, புல் அறிவினாரொடு நட்பு-அற்பரோடு கொள்ளும் சினேகம், (எதுபோலெனில்) ஆன் படு நெய் பெய் கலனுள்-பசுவின் நெய் பெய்துள்ள பாத்திரத்தில், அது களைந்து-அந்நெய்யை எடுத்துவிட்டு, வேம்பு அடு நெய்பெய்து அனைத்து-வேப்பங் கொட்டையினின்று (உண்டான) நெய்யை வார்த்தது போலாம்; (அரோ-அசை).

குறிப்பு:—நல்லோர் நட்பு ஆவின் நெய்க்கும், புல்லறிவினர் நட்பு வேம்பின் நெய்க்கும் நிகராகும். ஆகவே நல்லோரிடம் கொள்ளும் நட்பு அரிதில் போற்றப் பாலதென்றபடி.

ஆன்: 'ன்' சாரியை; கலன்-கலம் (கடைப்போலி); வரைநாட!: ஆடூஉ முன்னிலை; ஓரீஇ: அளபெடை. (23)

## 24. அறிவுடைமை

நல்நிலைக்கண் தன்னை நிறுப்பானும் தன்னை
நிலைகலக்கிக் கீழிடு வானும்—நிலையினும்
மேன்மேல் உயர்த்து நிறுப்பானும் தன்னைத்
தலையாகச் செய்வானும் தான். (24)

(ப-ரை) நல்நிலைக்கண்-நல்ல நிலைமையிலே, தன்னை நிறுப்பானும்-தன்னை நிறுத்திக்கொள்பவனும், தன்னை நிலை கலக்கி-தனது நிலைமையைப் பாழாக்கி, கீழிடுவானும்-தாழ்மைப்படுத்திக்கொள்பவனும், நிலையினும் மேல் மேல் உயர்த்து நிறுப்பானும்-தனது நிலைமையைவிட மேன்மேல் மிகுந்து இருக்கும்படி செய்துகொள்பவனும், தன்னை தலையாகச் செய்வானும்-தன்னை மேலோனாக ஆக்கிக்கொள்பவனும், தான்-தானே ஆகிறான்.

குறிப்பு:—ஒருவன் தனது அறிவிற்கும் முயற்சிக்கும் தக்கபடி சீறும் சிறுமையும் பெறுவான் என்றபடி. ஆகவே, ஒவ்வொருவனும் தனது அபிவிருத்திக்குத் தானே காரணமாகிறான்.

மேல்+மேல்=மேன்மேல்; நிறுப்பான், கீழிடுவான், செய்வான்; வினையாலணையும் பெயர்கள்; இச்சொற்களின் இறுதியிலுள்ள 'உம்' எண்ணும்மையாகும்; தான்: குறிப்பு வினைமுற்று; (பயனிலை). (24)

## 25. அறிவின்மை

கற்றறிந்த நாவினார் சொல்லார்தம் சோர்வஞ்சி
மற்றையர் ஆவார் பகர்வர் பனையின்மேல்
வற்றிய ஓலை கலகலக்கும் எஞ்ஞான்றும்
பச்சோலைக் கில்லை ஒலி. (25)

(ப-ரை) கற்று அறிந்த நாவினார்-நாவினால் நன்கு கற்றறிந்த பெரியோர், தம் சோர்வு அஞ்சி-தமக்கு (ஏதேனும்) சொற்குற்றம் நேரிடுமோ என்று பயந்து, சொல்லார்-(மிகுதியாக விரைந்து) பேச மாட்டார்கள்; மற்றையர் ஆவார்-மற்றவர்கள் (கல்லாத மூடர்கள்), பகர்வர்-(அறிவின்மையால் மனம் போனபடி) பேசுவர்; (எவைபோல எனின்), எஞ்ஞான்றும்-எப்போதும், பனையின்மேல்-பனைமரத்தின் மேல், வற்றிய ஓலை-உலர்ந்த ஓலைகள், கலகலக்கும்-சலசலவென்று ஓசைப்படும்; பசு ஓலைக்கு-பசுமையான ஓலைகட்கு, ஒலி இல்லை-(அத்தகைய) ஓசை இல்லையாகும்.

குறிப்பு:—ஈரமுள்ள பச்சையோலை ஒலியின்றி இருத்தல்போல, அறிவுள்ளார் வரம்பு கடந்து பேசமாட்டார்கள்; ஈரம் அற்று உலர்ந்த

ஓலை சலசலவென்று ஒலித்தல்போல் அறிவில்லா மூடர் அடக்கமின்றி வீணே மிகுந்து பேசுவர். இங்ஙனம் கூறியது எடுத்துக் காட்டுவமை அணியாகும்.

ஓலை: பால்பகா அஃறிணைப் பெயர்; கலகலக்கும்: இரட்டைக் கிளவி; பசுமை + ஓலை பச்சோலை. (25)

அரிய மொழிகள்:-நா-நாக்கு; சோர்வு-தளர்ச்சி, பகர்வர்-சொல்வர்.

## 26. நன்றியில் செல்வம்

அள்ளிக்கொள் வன்ன குறுமுகிழ ஆயினும்
கள்ளிமேல் கைநீட்டார் சூடும்பூ அன்மையால்
செல்வம் பெரிதுடையர் ஆயினும் கீழ்களை
நள்ளார் அறிவுடையார். (26)

(ப-ரை) அள்ளி கொள்வ அன்ன-அள்ளி எடுத்துக்கொள்ளலாம் என (அழகுமிகுந்த), குறு முகிழ ஆயினும்-சிறு அரும்புகள் கொண்டனவாயினும், சூடும்பூ அன்மையால்-சூடும்மலர் ஆகாமையால், கள்ளி மேல்-கள்ளிச்செடியின்மீது, கை நீட்டார்-(அதனைப் பறிப்பதற்கு எவரும்)கைநீட்டமாட்டார்கள்; (அங்ஙனமே),செல்வம்பெரிது உடையர் ஆயினும்-செல்வம் மிகுதியாக வாய்ந்தவராயினும், கீழ்களை-கீழ் மக்களை, அறிவுடையார் - அறிவுள்ளவர்கள், நள்ளார் - விரும்பமாட்டார்கள்.

குறிப்பு:—நன்றியில் செல்வம்—நல்வழியில் செலவுபெறாத செல்வம். கீழ்மக்கள் பெற்ற செல்வம் பிறர் எவர்க்கும் பயன் படாமையால், அது, கள்ளி பூத்த மலர்போலும் என்றார். இங்ஙனம் கூறியது எடுத்துக்காட்டுவமையணி ஆகும்.

கொள்வன்ன—(கொள்வ + அன்ன); அகரம் தொகுத்தல்விகாரம்; கீழ்: கீழ்மக்களைக்குறித்தது; நள்ளார்: எதிர்மறைப் பலர்பால் வினைமுற்று. முகிழ: குறிப்பு வினைமுற்று.

## 27. ஈயாமை

இரவலர் கன்றாக ஈவார்ஆ ஆக
விரகின் சுரப்பதாம் வண்மை—விரகின்றி
வல்லவர் ஊன்ற வடிஆபோல் வாய்வைத்துக்
கொல்லச் சுரப்பதாம் கீழ். (27)

(ப-ரை) இரவலர்-யாசிப்போர், கன்று ஆக-கன்று ஆகவும், ஈவார்-கொடுப்போர், ஆ ஆக-பசு ஆகவும், விரகின்-மகிழ்ச்சியோடு, சுரப்பதாம்-சுரத்தலே, வண்மை ஆம்-தானம் ஆகும்; விரகு இன்றி-

மகிழ்ச்சி இன்றி, வல்லவர் - வன்மையுள்ளவர், ஊன்ற - இழுத்து வருத்த, வடி ஆ போல்-(பால்) தரும் பசுவைப்போல, வாய் வைத்து கொல்ல-வாயால் பல உபாயங்கள் கூறி பீடிக்க, சுரப்பது-ஈவது, கீழ் ஆம்-இழிவு ஆகும்.

குறிப்பு:—கன்றைக் கண்ட பசு மகிழ்ந்து பால் சுரத்தல்போல், இரவலரைக் கண்டு அன்புடன் தருவதே சிறந்த ஈகையாகும்; கறப்பவர் பலவாறு வருத்தி மடியைப்பற்றி இழுக்க அதன்பின் பால் தரும் பசுவைப்போல, இரவலர் பல பேசிப் பீடித்தபின் வெறுப்புடன் உதவுவது ஈகையாகாது என்றபடி. இங்ஙனம் கூறியது உவமையணியாகும்; 'ஆக' உவமை உருபு.

ஈவார்: வினையாலணையும் பெயர்; ஆ: ஓரெழுத்து ஒருமொழி; ஊன்ற: முக்காலத்திற்கும் பொதுவான வினையெச்சம். ('செய்') எனும் வாய்பாடு).

அரிய மொழிகள்:—விரகு-உபாயம்; வடித்தல்-ஊற்றுதல்; வாய் வைத்து-பேசி; கீழ்-கீழ்மை. (27)

## 28. இன்மை.

அத்திட்ட கூறை அரைச்சுற்றி வாழினும்
பத்தெட் டுடைமை பலருள்ளும் பாடெய்தும்
ஒத்த குடிப்பிறந்தக் கண்ணும்ஒன் றில்லாதார்
செத்த பிணத்தின் கடை. (28)

(ப-ரை) அத்து இட்ட-தையல் மிகுந்த, கூறை-துணியை, அரை சுற்றி வாழினும்-இடுப்பில் கட்டிக்கொண்டு வாழ்ந்தபோதிலும், (வறுமை மிகுந்தபோதும்), பத்து எட்டு உடைமை-பத்தாகிலும் எட்டாகிலும் (கையில் பொருள்) வைத்திருத்தல், பலர் உள்ளும்-பல பேர்க்கு இடையில், பாடு எய்தும் - பெருமையைத் தரும்; ஒத்த குடிப்பிறந்தக் கண்ணும - ஏற்ற நல்ல குடியிற் பிறந்தபோதிலும், ஒன்று இல்லாதார்-சிறிதும் பொருள் இல்லாதவர், செத்த பிணத்தின் கடை-செத்த பிணத்திற்கும் கடைப்பட்டவராவர்.

குறிப்பு:—இன்மை-இல்லாமை; தரித்திரம். 'பணம் பந்தியிலே குலம் குப்பையிலே' என்னும் கருத்து இங்கு விளக்கப்பட்டது; பணம் இல்லாதவன் பிணத்திற்கும் கடை என்றார்.

அரை: ஆகுபெயர்; முழு உடலின் அரைப்பாகமாகிய ஓர் இடத்தைக் குறித்தது; இல்லாதார்: எதிர்மறை வினையாலணையும் பெயர்; கடை: கடையாயவர் (ஆகுபெயர்).

அரிய மொழிகள்:—அத்து - தையல், கூறை - வஸ்திரம்; பாடு-பெருமை; ஒத்த-ஏற்ற. (28)

## 29. மானம்.

கடைஎலாம் காய்பசி அஞ்சுமற் றேனை
இடைஎலாம் இன்னாமை அஞ்சும்--புடைபரந்த
வில்புருவ வேல்நெடும் கண்ணாய் தலைஎல்லாம்
சொல்பழி அஞ்சி விடும். (29)

(ப-ரை) புடை-பக்கங்களில், பரந்த-பரவிய, வில் புருவம் வேல் நெடும் கண்ணாய்-வில்போல் (வளைந்த) புருவமும் வேலாயுதம்போல் (அகன்று) நீண்டகண்களுமுடைய பெண்ணே! கடைஎலாம்-அதமர்கள் எல்லோரும், காய்பசி அஞ்சும்-(வயிறறை) எரிக்கும் பசிக்கு அஞ்சுவார்கள்; இடை எலாம்-மத்திமர்கள் எல்லோரும், இன்னாமை அஞ்சும் துன்பத்திற்கு அஞ்சுவார்கள்; தலை எல்லாம்-உத்தமர்களோவெனில், சொல்பழி அஞ்சிவிடும்-சொறகுற்றத்திற்கு அஞ்சுவார்கள்.

குறிப்பு:—மானம் அவமானம் என்பது எதையும் நோக்காமல், பசியைப் போக்கிக்கொள்ளும் உபாயத்தினையே நாடியிருப்பவர் கடையாயர் ஆவர்; இராசதண்டனை, யமதண்டனை முதலிய துன்பத்திற்கு அஞ்சி யாதொரு தீச்செயலும் புரியாதிருப்போர் இடையாயர் ஆவர்; மானம் மிகுந்து உலக அபவாதத்திற்கு அஞ்சுபவரே தலையாயர் ஆவர் என்றபடி.

அஞ்சும்: 'செய்யும்' எனும் வாய்பாட்டு முற்று பலர் பாலில் வந்தது; விற்புருவ.........கண்ணாய்!: மகடூஉ முன்னிலை; விடும்: துணை வினை; (அச்சம் உணர்த்திற்று). (29)

## 30. இரவச்சம்.

இழித்தக்க செய்தொருவன் ஆர உணவின்
பழித்தக்க செய்யான் பசித்தல் தவறோ?
விழித்திமைக்கும் மாத்திரை அன்றோ? ஒருவன்
அழித்துப் பிறக்கும் பிறப்பு. (30)

(ப-ரை) இழித்தக்க செய்து - இழிவுக்குக் காரணமாகிய (பல வேலைகள்) செய்து, ஒருவன் ஆர உணவின்-ஒருவன் வயிறு நிரம்ப உண்ணுதலைப் பார்க்கிலும், பழித்தக்க செய்யான்-பழிப்பிற்குக் காரணமாகிய எத்தகைய வேலையும் செய்யாதவனாகி, பசித்தல்-பசியோடு இருத்தல், தவறோ?-பிழையாகுமோ? (ஆகாது); (ஏனெனில்) ஒருவன் அழித்து பிறக்கும் பிறப்பு-ஒருவன் இறந்து (மீண்டும்) பிறக்கின்ற பிறப்பு, விழித்து இமைக்கும் மாத்திரை அன்றோ?-கண்ணை விழித்து இமைகொட்டும் கால அளவைக் கொண்டதல்லவா? (ஆம்).

குறிப்பு:—இரவச்சம் - இரத்தற்கு அஞ்சுதல். இழி தொழில் புரிந்து வயிறு வளர்ப்பதைவிட பசியால் வருந்தி உயிர் துறத்தல் சிறக்கும் என்றார். மாந்தர் இவ்வுலகில் உயிரோடிருப்பது சிறிது போது என்பதை 'விழித்திமைக்கும் மாத்திரை' எனும் சொற்றொடரால் விளக்கினார்; ஒரு காரணம் காட்டி, அது கொண்டு ஒரு நீதியை விளக்கினார் ஆதலில் இஃது ஏதுவணியாகும்.

தவறோ: 'ஓ' எதிர் மறைப்பொருள்; அன்றோ: 'ஓ' தேற்றப் பொருள்; மாத்திரை-கால அளவு. (30)

## 31. அவையறிதல்

புத்தகமே சாலத் தொகுத்தும் பொருள்தெரியார்
உய்த்தகம் எல்லாம் நிறைப்பினும்—மற்றவற்றைப்
போற்றும் புலவரும் வேறே பொருள்தெரிந்து
தேற்றும் புலவரும் வேறு. (31)

(ப-ரை) புத்தகமே-புத்தகங்களையே, சால தொகுத்தும்-மிகுதியாகச் சேகரித்தும், பொருள்தெரியார்-(அப்புத்தகங்களிலுள்ள) பொருளை அறியாதவர்களாகி, உய்த்து-(அவைகளைக்) கொணர்ந்து, அகம் எல்லாம் நிறைப்பினும்-வீடு முழுமையும் நிறைத்தபோதிலும், அவற்றைப் போற்றும் புலவரும்-அப்புத்தகங்களை வைத்துக்காக்கும் புலவர்களும், வேறே-வேறே யாவர்; பொருள் தெரிந்து-(அப்புத்தகங்களிலுள்ள) பொருளைக் கற்றுணர்ந்து; தேற்றும்-(பிறர்க்கு) அறிவிக்கும், புலவரும்-பண்டிதர்களும், வேறு வேறேயாவர்; (மற்று-அசை).

குறிப்பு:—அவையறிதல்-சபையை அறிதல். புத்தகங்களைச் சேகரித்துப் பாதுகாப்பதால் எவரும் பண்டிதராகமாட்டார்; அவற்றின் பொருளை யறிந்து பிறர்க்கு எடுத்துரைக்கும் திறமை வாய்ந்தவரே பண்டிதராவர் என்றபடி. பொருள் தெரியாது போற்றுபவரைப் 'புலவர்' என்றது அன்னோரைப் பரிகசித்தது போலும்.

சால: உரிச்சொல்; வேறு: குறிப்பு வினைமுற்று; இருதிணை ஐம்பால் மூவிடங்களுக்கும் பொது; தேற்றும்: பிறவினை; (தேறும்: தன்வினை). (31)

## 32. புல்லறிவாண்மை

அருளின் அறமுரைக்கும் அன்புடையார் வாய்ச்சொல்
பொருளாகக் கொள்வர் புலவர்—பொருளல்லா
ஏழை அதனை இகழ்ந்துரைக்கும் பாற்கூழை
மூழை சுவையுணரா தாங்கு. (32)

(ப-ரை) அருளின்-அருளோடு, அறம் உரைக்கும் அறநெறியை எடுத்து உரைக்கின்ற, அன்புடையார் வாய் சொல்-அன்புள்ளவர்களது வார்த்தையை, புலவர் கொள்வர்-அறிவுடையோர் ஏற்றுக்கொள்வர்; பொருள் அல்லா ஏழை-ஒரு பொருளாகக் கருதற்கு இயலாத, ஏழை-அறிவில்லா எளியன், அதனை இகழ்ந்து உரைக்கும்-(அன்புடையார் வாய்மொழியை) இகழ்ந்து பேசுவான்; (எதுபோல எனில்) மூழை-அகப்பை, பால் கூழை-பாலில் குழைந்த சோற்றின், சுவை உணராது ஆங்கு-(இனிய) சுவையை அறியாதது போலும்.

குறிப்பு:—புல்லறிவாளர், அன்புடையார் வாய்ச்சொல்லை ஏற்றுக் கொள்ளார் என்றபடி; அருள்-காரணமின்றி எல்லா உயிர்களிடத்தும் செலற்பால தயை; அன்பு-அறிந்தோரிடத்துமட்டும் செல்லும் தயை; ஆகவே அன்பினும் அருள் சிறந்தது என்றபடி.

கூழை-கூழின்; (உருபு மயக்கம்); ஆங்கு: உவமை உருபு;'போல' எனும் பொருள் கொண்டது. இச்செய்யுளில் உவமையணி தோன்றுதல் காண்க. (32)

## 33. பேதைமை

குலம்தவம் கல்வி குடிமைமூப் பைந்தும்
விலங்காமல் எய்தியக் கண்ணும்—நலம்சான்ற
மைஅறு தொல்சீர் உலகம் அறியாமை
நெய்யிலாப் பால்சோற்றின் நேர். (33)

(ப-ரை) குலம்-(உயர்ந்த) குலமும், தவம்-தவ வொழுக்கமும், கல்வி-படிப்பும், குடிமை-(சிறந்த) குடிவாழ்க்கையும், மூப்பு-பெரும் பிராயமும், ஐந்தும்-ஆகிய இவ்வைந்தும், விலங்காமல்-தவறாமல், எய்தியக் கண்ணும்-(ஒருவனுக்கு) வாய்ந்திருந்தும், (அவன்) நலம் சான்ற-பெருமை மிகுந்த, மை அறு தொல் சீர்-குற்றம் (சிறிதும்) இல்லாத பழமையான சிறப்போடு கூடிய, உலகம்-(மோக்ஷ) உலகத்தின் தன்மையை, அறியாமை-அறியாதிருப்பது, நெய் இலா பால் சோற்றின் நேர்-நெய்யில்லாத வெண்ணிறமான சோற்றிற்கு நிகராகும்.

குறிப்பு:—குலம், தவம் முதலிய ஐந்து நலங்களும் பெற்ற ஒருவன், நல்லுலகம் அடையற்பால் முயற்சி செய்யாதிருத்தல் பேதைமை என்றபடி. வெண்மையான (தூய) சோற்றிற்கு நெய் இல்லாவிடின், அது எவ்வகையினும் நலம் பெறாது; இக்கருத்து இங்கு உபமானமாகக் கூறப்பட்டது. இங்ஙனம் கூறியது உவமையணியாகும்.

தொன்மை + சீர் = தொல்சீர். மை-கறுப்பு; குற்றத்தை உணர்த்திற்று; அறியாமை: எதிர்மறைத் தொழிற்பெயர். பால் சோறு: பால் போன்ற சோறு; உவமைத்தொகை; நேர்: உவமை யுருபு. (33)

## 34. கீழ்மை

பொற்கலத் தூட்டிப் புறந்தரினும் நாய்பிறர்
எச்சிற் கிமையாது பார்த்திருக்கும்—அச்சீர்
பெருமை உடைத்தாக் கொளினும்கீழ் செய்யும்
கருமங்கள் வேறு படும். (34)

(ப-ரை) பொன்கலத்து-பொன்பாத்திரத்தில் (உணவை இட்டு) ஊட்டி-உண்பித்து, புறந்தரினும்-விடுத்தபோதிலும், நாய்-நாயானது, பிறர் எச்சிற்கு-பிறர் (எறியும்) எச்சிற் சோற்றுக்கு, இமையாது பார்த்திருக்கும் - கண்கொட்டாமல் (சமயம்) பார்த்திருக்கும்; அச்சீர் - அஃதேபோல், பெருமைஉடைத்து ஆ-பெருமையுடையவனாக, கொளினும்-(பிறர் தன்னை) மதித்தபோதிலும், கீழ்செய்யும் கருமங்கள்-கீழ் மக்கள் புரியும் வேலைகள், வேறுபடும்-வேறாகும் (இழிவாகும்).

குறிப்பு:—கீழ்மக்களைப் பெருமைபடுத்திக் கௌரவித்தபோதிலும், அன்னோர் இழிதொழில்செய்யும் இயல்பினராகவே இருப்பர். கீழ்மக்களின் இயல்பும், நாயின் இயல்பும் ஒன்றென உவமையணியில் கூறினர்.

ஊட்டி: பிறவினை; எச்சில்-உண்டு எஞ்சியது; இமையாது: எதிர்மறை வினையெச்சம்; அச்சீர்-அங்ஙனமே (உவமை உருபு); 'உடைத்து' என்று அஃறிணையில் கூறியது இகழ்ச்சியை உணர்த்துதற்காம். புறந்தரினும், கொளினும்: உம்மைகள் உயர்வு சிறப்பு. (34)

## 35. கயமை

மலைநலம் உள்ளும் குறவன்; பயந்த
விளைநிலம் உள்ளும் உழவன்; சிறந்தொருவர்
செய்தநன் றுள்ளுவர் சான்றோர்; கயம்தன்னை
வைததை உள்ளி விடும். (35)

(ப-ரை) குறவன் மலை நலம் உள்ளும்-குறவன் மலையின் வளத்தைக் கருதியிருப்பன்; பயந்த-பலன்தந்த, விளைநிலம்-விளைகின்ற நிலத்தை, உழவன் உள்ளும்-உழவன் கருதியிருப்பன்; சான்றோர்-மேலோர், ஒருவர் செய்த நன்று-ஒருவர் செய்த உபகாரத்தை, சிறந்து உள்ளுவர்-சிறப்பாக மனத்தில்(மறவாது) நினைத்துக்கொண்டிருப்பர்;

கயம்-கயவன் (அற்பன்), தன்னை வைததை உள்ளிவிடும்-(பிறன் ஒரு வன்)`தன்னைத் திட்டியதை (மறவாமல்) நினைவிற்கொண்டிருப்பான்.

குறிப்பு:—கயமை-மூடத்தன்மை. குறவனுக்கு உறைவிடம் மலை யாதலால், அவன் அதனையே நினைந்திருப்பன்; தனது வாழ்வுக்கு உதவியாகப் பலன் தரும் விளைநிலனை உழவன் மறவாமல் மனத்தில் கொண்டிருப்பன்; மேலோர் தமக்குப் பிறர்செய்த வுதவியை மறவா திருப்பர். இம்மூவர் குணமும் இவ்வாறுதல்போல, பிறர் வைததை மறவாதிருத்தல், கயவரது குணமாகும் என்றபடி.

உள்ளும்: செய்யுமென்னும் வாய்பாட்டு முற்று, ஆண்பாலில் வந்தது; 'கயம்' என்று அஃறிணையில் கூறியது இகழ்ச்சிபற்றி; விடும்: துணைவினை. (35)

## 36. மூவகை மாந்தர்*

கல்லாக் கழிப்பர் தலையாயார்; நல்லவை
துவ்வாக் கழிப்பர் இடைகள்; கடைகள்
இனிதுண்ணேம் ஆரப் பெறேம்யாம் என்னும்
முனிவினால் கண்பா டிலர். (36)

(ப-ரை) தலையாயர்-உத்தமர், கல்லா-கற்று, கழிப்பர் காலத்தைப் போக்குவர்; இடைகள்-மத்தியமர், நல்லவை துவ்வா-நல்வழியில் கிடைத்த பொருளை அனுபவித்து, கழிப்பர்-காலத்தைப் போக்குவர்; கடைகள் - அதமரோவெனில், 'யாம் இனிது உண்ணேம் - யாம் இனிய உணவை உண்ணப்பெற்றிலோம்; ஆர பெறேம்-மனமார (மிகுந்த செல்வத்தைப்) பெற்றிலோம்,' என்னும் முனிவினால்-என்கிற வெறுப்பினால், கண்பாடு இலர்-உறக்கமின்றி வருந்தியிருப்பர்.

குறிப்பு:—நூல்களைக்கற்றல் தலையாயார் தொழில் என்றும், நல் வழியில் கிடைத்தபொருளைக்கொண்டு சுகத்தை அனுபவித்தல் இடையாயார் செயலென்றும், திருப்தியின்றிப் பேராசை மிகுந்து உறக்கமின்றி வருந்துதல் கடையாயார் செய்கையென்றும் வகுத்துக் கூறினார்.

கல்லா, துவ்வா: இறந்தகால வினையெச்சம் ('செய்யா' என்னும் வாய்பாடு) ; உண்ணேம், பெறேம்: எதிர்மறைத் தன்மைப் பன்மை வினைமுற்று; கண்பாடு: முதனிலை திரிந்த தொழிற்பெயர்; 'கண்படு' எனும் பகுதி திரிந்தது; (முதனிலை-பகுதி). (36)

*உடுக்குறி இட்ட செய்யுட்கள், 'பன்னெறி' எனும் அதிகாரத்தி லுள்ளன.

## 37. மகன்

செந்நெல்லால் ஆய செழுமுளை மற்றுமச்
செந்நெல்லே ஆகி விளைதலால்—அந்நெல்
வயல்நிறையக் காய்க்கும் வளவயல் ஊர
மகனறிவு தந்தை அறிவு. (37)

(ப-ரை) செந்நெல்லால் ஆய செழுமுளை-செந்நெல்லின் வளப்பமான முளைகள், மற்றும்-பின்னும், அ செந்நெல்லே ஆகி விளைதலால்-அந்தச் செந்நெற் பயிராகவே விளைவதால், அ நெல்-அத்தகைய செந்நெற்பயிர், வயல்நிறைய காய்க்கும்-வயல்முழுமையும் விளையப்பெற்ற, வளம் வயல் ஊர-வளப்பம் பொருந்திய வயல்கள் கொண்ட நாட்டுக்குரிய அரசனே! மகன் அறிவு-மகனது அறிவு, தந்தை அறிவு-தந்தையின் அறிவை ஒத்திருக்கும்.

குறிப்பு:—மகன் அறிவும், தந்தையறிவும் பலவகையில் ஒரே விதமாய்த் தோன்றும் என்றபடி.

ஆய; இறந்தகால பெயரெச்சம்; செம்மை+நெல்=செந்நெல்; செழுமை+முளை=செழுமுளை; வயலூர!: ஆடூஉ முன்னிலை (பாண்டியனை நோக்கிச் சொல்லியபடி); அறிவு: தொழிற்பெயர். (37)



# இன்பப் பால்.

## 38. மனையாள்*

**மழைதிளைக்கும் மாடமாய் மாண்பமைந்த காப்பாய்
இழைவிளக்கு நின்றிமைப்பின் என்னும்—விழைதக்க
மாண்ட மனையாளை இல்லாதான் இல்லகம்
காண்டற் கரியதோர் காடு. (38)**

(ப-ரை) *மழை திளைக்கும்-மேகத்தை அளாவும் (மிக உயரமான) மாடம் ஆய்-மேல்நிலை கொண்டதாய், மாண்பு அமைந்த-சிறப்பு வாய்ந்த, காப்பு ஆய்-காவல்கள் கொண்டதாய், இழை விளக்கு-ஆபரணங்களாகிற விளக்கு, நின்று இமைப்பின்-நிலையாகப் பிரகாசித்த போதிலும், என் ஆம்-என்ன பிரயோசனம்? (பயனில்லை); விழை தக்க-விரும்பத்தக்க, மாண்ட மனையாளை-மாட்சிமைக்குணம் மிகுந்த இல்லாளை, இல்லாதான்-பெறாதவனது, இல்லகம்-மாளிகை, காண்டற்கு அரியது-காணக்கூடாத, ஓர் காடு-ஒரு காடே ஆம்.*

குறிப்பு:—*'இல்லாள் இல்லா இல்லம் இடுகாடு போலும்' எனும் கருத்து இங்குக் கூறப்பட்டது. "பாழே மனைக்கொடி யில்லாமனை" என்று ஆன்றோர் கூறியமையும் அறிக. மனையாள் நற்குணமுள்ளவளாய் இருத்தல் வேண்டும் என்பதும் இங்குக் கூறப்பட்டது.*

*மாண்பு-மாட்சிமை;பெருமை. காப்பு: தொழிற்பெயர். நற்குணம் வாய்ந்த மனைவி, இல்லத்தில் இருத்தல்வேண்டும் என்பது 'மாண்ட' எனும் அடைமொழியால் ஏற்படும்; இல்லாதான்; எதிர்மறை வினையாலணையும் பெயர்; இல்லகம் (இல்+அகம்): ஒரு பொருள் குறித்த இருசொல். கடைசி அடியில் முற்றுமோனை.* (38)

அரிய மொழிகள்:—*திளைக்கும்-தவழும்; தொடும்; இழை-ஆபரணம்; விழை-விருப்பம்; மாண்ட-மாட்சிமை பொருந்திய; அகம்-வீடு.*

## 39. கொடிய மனைவியர் *

எறியென் றெதிர் நிற்பாள் கூற்றம் சிறுகாலை
அட்டில் புகாதாள் அரும்பிணி—அட்டதனை
உண்டி உதவாதாள் இல்வாழ்பேய் இம்மூவர்
கொண்டானைக் கொல்லும் படை. (39)

(ப-ரை) எறி என்று-(என்னை) அடி என்று (எதிர்த்து), எதிர் நிற்பாள்-கணவன் எதிரே நின்று பேசுபவள், கூற்றம்-யமன்போல்வாள்; சிறுகாலை-அதிகாலையில், அட்டில் புகாதாள்-சமையல் அறைக்குள் புகாதவள் (சமையல்வேலை தொடங்காதவள்), அரும்பிணி-கொடிய வியாதி போல்வாள்; அட்டதனை-சமைத்த பண்டங்களை, உண்டி உதவாதாள்-(கணவனுக்கு) உணவாக இடாமல் தானே உண்பவள், இல் வாழ் பேய்-வீட்டில் குடிகொண்ட பேய்போல்வாள்; இம்மூவர்-இம்மூவகை மனைவியர், கொண்டானை கொல்லும் படை-கணவனைக் கொல்லும் (கொடிய) ஆயுதம் போல்வர்.

குறிப்பு:—கோபம் மிகுந்து கணவன் ஏதேனும் பேசும்போது எதிர்த்து வாதாடுவதும், வேளையில் சமையல் செய்யாமலிருத்தலும், அட்ட உணவுப் பண்டங்களைக் கணவனுக்குக் கொடுக்காமல் தானே உண்பதும், தீய மனைவியர்ச் செய்கையாம்.

சிறுகாலை-உதயகாலம்; அருமை+பிணி=அரும்பிணி; கொண்டான்-தன்னை மனைவியாகக் கொண்டவன் (கணவன்), கூற்றம்: உயிரையும் உடலையும் இரண்டாகக் கூறுபடுத்துபவன்;(கூறு-பாகம்).

அரிய மொழிகள்:—கூற்றம்-யமன்; சிறுகாலை-அதிகாலை; அட்டில்-சமையல் அறை; உண்டி-உணவு; கொண்டான்-கணவன். (39)

## 40. கற்புடை மகளிர்

நாலாறும் ஆறாய் நனிசிறிதாய் எப்புறனும்
மேலாறு மேலுறை சோரினும்—மேலாய
வல்லாளாய் வாழுமூர் தற்புகழும் மாண்கற்பின்
இல்லாள் அமர்ந்ததே இல். (40)

(ப-ரை) நால் ஆறும்-நான்கு பக்கங்களிலும், ஆறு ஆய்-வழியுடையதாகி, நனி சிறிது ஆய்-மிகச் சிறியதாகி, எ புறனும்-எல்லாப் பக்கங்களிலும், மேலாறு-மேல்வழியினின்று, மேல் உறை சோரினும்-தன்மீது மழைநீர் சொரிந்தாலும் (வறுமை மிகுந்து இத்தகைய துன்பம் அனுபவித்தபோதிலும்), மேல் ஆய-சிறந்த இல்லற முறைகளில், வல்லளாய்-தேர்ந்தவளாகி, தன் புகழும் மாண் கற்பின்-தன்னை (எல்லோரும்) புகழத்தக்க மாட்சிமை வாய்ந்த கற்போடு கூடிய, இல்லாள்-மனைவி, அமர்ந்ததே இல்-பொருந்தி இருந்ததே வீடாகும்.

குறிப்பு:—முன்னிரண்டடிகள் வறுமையின் கொடுமையை விளக்கும். வறுமையைக் கண்டு வெறுப்புக் கொள்ளாமல், கற்பு நலம் மிகுந்து விளங்கும் மனைவி இல்லத்திற்கு அழகு என்றார்.

நனி: உரிச்சொல்; புறன்: (புறம்;) போலி; மகரத்துக்கு னகரம் போலியாக வந்தது; சோரினும்: 'உம்' இழிவு சிறப்பு; அமர்ந்ததே: ஏகாரம் தேற்றம். (40)



PRINTED AT THE GUARDIAN PRESS, MADRAS—1927.